# புதிய ஏற்பாடு

புதிய மொழிபெயர்ப்பு
கிரேக்க மூல நூலிலிருந்து செய்யப்பட்டது

**THE BIBLE SOCIETY**
**OF SINGAPORE, MALAYSIA & BRUNEI**
BIBLE HOUSE, ARMENIAN STREET,
SINGAPORE 6
*1978*

## புதிய ஏற்பாட்டில் அடங்கிய நூல்கள்

# மத்தேயு எழுதின அருட்செய்தி நூல்

## இயேசுவின் மூதாதையர் அட்டவணை
*(லூக். 3:23-38)*

**1** ஆபிரகாமின் மைந்தராகிய தாவீதின் மைந்தர் இயேசுகிறிஸ்துவின் மூதாதையர் அட்டவணை:

2 ஆபிரகாமுக்கு ஈசாக்குப் பிறந்தார்; ஈசாக்குக்கு யாக்கோபு பிறந்தார்; யாக்கோபுக்கு யூதாவும் அவருடைய சகோதரர்களும் பிறந்தார்கள். 3 யூதாவுக்குப் பேரேசும் சேராவும் தாமாரிடம் பிறந்தார்கள்; பேரேசுக்கு எஸ்ரோம் பிறந்தார்; எஸ்ரோமுக்கு ஆராம் பிறந்தார்; 4 ஆராமுக்கு அம்மினதாபு பிறந்தார்; அம்மினதாபுக்கு நகசோன் பிறந்தார்; நகசோனுக்குச் சல்மோன் பிறந்தார்; 5 சல்மோனுக்குப் போவாசு ராகாபிடம் பிறந்தார்; போவாசுக்கு ஓபேத்து ரூத்தினிடம் பிறந்தார்; ஓபேத்துக்கு ஈசாய் பிறந்தார்; 6 ஈசாய்க்குத் தாவீது அரசன் பிறந்தார்.

தாவீதுக்கு உரியாவின் மனைவியாயிருந்தவளிடம் சாலொமோன் பிறந்தார்; 7 சாலொமோனுக்கு ரெகொபெயாம் பிறந்தார்; ரெகொபெயாமுக்கு அபியா பிறந்தார்; அபியாவுக்கு ஆசா பிறந்தார்; 8 ஆசாவுக்கு யோசபாத்துப் பிறந்தார்; யோசபாத்துக்கு யோராம் பிறந்தார்; யோராமுக்கு உசியா பிறந்தார்; 9 உசியாவுக்கு யோதாம் பிறந்தார்; யோதாமுக்கு ஆகாஸ் பிறந்தார்; ஆகாசுக்கு எசேக்கியா பிறந்தார்; 10 எசேக்கியாவுக்கு மனாசே பிறந்தார்; மனாசேயுக்கு ஆமோஸ் பிறந்தார்; ஆமோசுக்கு யோசியா பிறந்தார்; 11 பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட காலத்தில் யோசியாவுக்கு எகொனியாவும் அவருடைய சகோதரர்களும் பிறந்தார்கள்.

12 பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டபின் எகொனியாவுக்குச் சலாத்தியேல் பிறந்தார்; சலாத்தியேலுக்குச் செருபாபேல் பிறந்தார்; 13 செருபாபேலுக்கு அபியூத்துப் பிறந்தார்; அபியூத்துக்கு எலியாக்கீம் பிறந்தார்; எலியாக்கீமுக்கு ஆசோர் பிறந்தார்; 14 ஆசோருக்குச் சாதோக்குப் பிறந்தார்; சாதோக்குக்கு ஆகீம் பிறந்தார்; ஆகீமுக்கு எலியூத்துப் பிறந்தார்; 15 எலியூத்துக்கு எலெயாசார் பிறந்தார்; எலெயாசாருக்கு மாத்தான் பிறந்தார்; மாத்தானுக்கு யாக்கோபு பிறந்தார்; 16 யாக்கோபுக்கு மரியாளுடைய கணவரான யோசேப்புப் பிறந்தார்; இந்த மரியாளிடம் கிறிஸ்து என்னும் இயேசு பிறந்தார்.

17 இவ்வாறு, ஆபிரகாம் முதல் தாவீது வரை மொத்தத் தலைமுறைகள் பதினான்கு, தாவீதுக்குப் பிறகு பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட காலம் வரை தலைமுறைகள் பதினான்கு, பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்ட காலம் முதல் கிறிஸ்து வரை தலைமுறைகள் பதினான்கு.

## இயேசுவின் பிறப்பு
*(லூக். 2:1–7)*

18 இயேசுகிறிஸ்துவினுடைய பிறப்பின் விவரம்: அவருடைய தாயாராகிய மரியாள், யோசேப்பு என்பவருக்குத் திருமண ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தார்; அவர்கள் கூடிவாழுமுன் மரியாள் கருவுற்றிருந்ததாகத் தெரியவந்தது. அவர் கருவுற்றது தூய ஆவியின் செயல். 19 அவருடைய கணவர் யோசேப்பு நேர்மை தவறாதவர்; மரியாளுக்கு இகழ்ச்சி உண்டுபண்ண மனமில்லாததால் அவரை எவருக்கும் தெரியாமல் விலக்கிவிட வேண்டுமென்றிருந்தார். 20 அவர் இவ்வாறு முடிவு செய்திருக்க, ஆண்டவரின் தூதன் அவருக்குக் கனவில் தோன்றி, ''யோசேப்பே, தாவீதின் வழித்தோன்றலே, மரியாளை உன் மனைவியாக ஏற்றுக்கொள்ள அஞ்ச வேண்டாம். ஏனெனில், அவளிடம் உருவாகியிருப்பது தூய ஆவியினால் உண்டானது. 21 அவள் ஒரு மகனைப் பெற்றெடுப்பாள். அவருக்கு இயேசு என்று பெயரிடுவாய்; ஏனெனில், அவரே தம்முடைய மக்களை அவர்களுடைய பாவங்களினின்று மீட்பார்'' என்றார்.

> 22 ''இதோ, கன்னியானவள் கருவுற்று ஒரு மைந்தனைப் பெற்றெடுப்பாள்; அவருக்கு இம்மானுவேல் எனப் பெயரிடுவார்கள்''

என்று ஆண்டவர் இறைவாக்குரைப்பவர் மூலமாக உரைத்தது நிறைவேற இவையனைத்தும் நடந்தன. 23 இம்மானுவேல் என்பதற்கு நம்முடன் கடவுள் இருக்கிறார் என்பது பொருள்.

24 யோசேப்பு விழித்தெழுந்து ஆண்டவரின் தூதன் தமக்குக் கட்டளையிட்டபடியே செய்தார் அவர் மரியாளைத் தம் மனைவியாக ஏற்றுக்கொண்டு, 25 அவர் *அம்மைந்தனைப் பெற்றெடுக்கும்வரை அவரை அறியாதிருந்தார்; அந்த மைந்தனுக்கு இயேசு என்று பெயரிட்டார்.

## ஞானிகள் எருசலேமுக்கு வருதல்

**2** ஏரோது அரசன் காலத்தில், யூதேயாவிலுள்ள பெத்லெகேமில் இயேசு பிறந்த

* 'தம் முதற்பேறான மைந்தனை' என்பது முக்கியமெனக் கருதப்படாத பிரதிகளின் பாடம்.

**1:1** மத். 9:27; கலா. 3:16; எபி. 7:14. **1:3** ஆதி. 38:29. **1:18** லூக். 1:27; 2:5, 11. **1:21** லூக். 1:31. **1:23** ஏசா. 7:14. **1:25** லூக். 2:21.

பின், கிழக்குத் திசையிலிருந்து மாகோய் என்னும் ஞானிகள் சிலர் எருசலேமுக்கு வந்து, 2 ''யூதரின் அரசராகப் பிறந்திருக்கிறவர் எங்கே இருக்கிறார்? கிழக்கில் அவருடைய விண்மீன் தோன்றக் கண்டோம்; அவரைப் பணிவதற்காக வந்திருக்கிறோம்'' என்றனர். 3 அதைக் கேட்டதும் ஏரோது அரசன் கலக்கமடைந்தான். அவனோடு எருசலேம் நகரத்தார் அனைவருமே கலங்கினர். 4 அவன் யூத மக்களிடையே இருந்த எல்லாத் தலைமை ஆசாரியர்களையும் வேத அறிஞர்களையும் ஒன்றுகூட்டி, *மேசியா எங்கே பிறக்க வேண்டும் என்று அவர்களிடம் கேட்டான். 5 அவர்கள் அவனிடம், ''யூதேயாவிலுள்ள பெத்லெகேமில் பிறக்க வேண்டும்; ஏனெனில்,

> 6 ''யூதேயா நாட்டிலுள்ள பெத்லெகேமே, நீ யூதாவின் தலைமையான நகரங்களில் சிறியதல்ல; ஏனென்றால், உன்னிடமிருந்து ஆட்சித் தலைவர் ஒருவர் தோன்றிவருவார்; அவர் ஆயனைப்போல என்னுடைய மக்களாகிய இஸ்ரவேலரை நடத்துவார்'

என்பது இறைவாக்குரைப்பவரின் நூலில் எழுதியிருக்கிறது'' என்று சொன்னார்கள்.

7 அப்பொழுது ஏரோது அந்த ஞானிகளை மறைவாகத் தனியே அழைத்து, விண்மீன் தோன்றிய காலத்தைப்பற்றி அவர்களிடமிருந்து திட்டமாக அறிந்து கொண்டு, 8 ''நீங்கள் போய், குழந்தையைக் குறித்துத் திட்டமாகக் கேட்டறியுங்கள்; நீங்கள் அதைக் கண்டபிறகு எனக்குத் தெரியப்படுத்துங்கள்; அப்பொழுது நானும் வந்து அந்தக் குழந்தையைப் பணிந்துகொள்வேன்'' என்று சொல்லி, அவர்களைப் பெத்லெகேமுக்கு அனுப்பினான். 9 அவர்கள் அரசன் சொன்னதைக் கேட்டு, அவ்வாறே புறப்பட்டுப் போனார்கள். முன்பு தோன்றிய போது அவர்கள் பார்த்த அதே விண்மீன் அப்போது தோன்றி, அவர்களுக்கு முன்னே சென்று, குழந்தை இருந்த இடத்திற்குமேல் வந்ததும் நின்றுவிட்டது. 10 விண்மீனின் காட்சி அவர்களுக்கு அளவுகடந்த மகிழ்ச்சியை அளித்தது. 11 அவர்கள் வீட்டிற்குள் போய், அங்கே தாயாராகிய மரியாளிடம் குழந்தையைக் கண்டு, கீழே விழுந்து அதைப் பணிந்தார்கள்; பிறகு அவர்கள் தங்கள் அரும்பொருள் பெட்டிகளைத் திறந்து, பொன்னையும் தூபவர்க்கத்தையும் வெள்ளைப் போளத்தையும் அதற்குக் காணிக்கையாகப் படைத்தார்கள். 12 அதன்பின் அவர்கள் ஏரோதுவினிடம் திரும்பிப் போக வேண்டாமென்று கனவில் கடவுளால் எச்சரிக்கப்பட்டு, வேறு வழியாகத் தங்கள் சொந்த நாட்டுக்குப் போய்விட்டார்கள்.

## எகிப்துக்குச் செல்லுதல்

13 அவர்கள் போனபின், ஆண்டவருடைய தூதன் யோசேப்புக்குக் கனவில் தோன்றி, ''நீ எழுந்து குழந்தையையும் தாயையும் கூட்டிக்கொண்டு எகிப்துக்கு ஓடிவிடு. நான் உனக்குச் சொல்லும் வரையில் அங்கேயே இரு. ஏனெனில், குழந்தையைக் கொன்றுவிடுவதற்காக ஏரோது அதைத் தேடப்போகிறான்'' என்று சொன்னான். 14 யோசேப்பு உடனே எழுந்து, குழந்தையையும் தாயையும் கூட்டிக்கொண்டு, இரவிலேயே புறப்பட்டு எகிப்துக்குப் போனார். 15 ஏரோது இறக்கும் வரை அவர் அங்கேயே இருந்தார். ஆண்டவர் தம் வாக்குரைப்பவர் மூலமாக, ''எகிப்திலிருந்து என்னுடைய மைந்தனை வரவழைத்தேன்'' என்று உரைத்தது இவ்வாறு நிறைவேறிற்று.

## ஏரோது செய்த படுகொலை

16 பிறகு ஏரோது, அந்த ஞானிகள் தன்னை ஏமாற்றிவிட்டதைக் கண்டு மிகவும் சினமடைந்தான். அவன் தான் அந்த ஞானிகளிடமிருந்து திட்டமாக அறிந்த காலத்தின்படி கணக்கிட்டு ஆள்களை அனுப்பி, பெத்லெகேமிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் இரண்டு வயதும் அதற்கு உட்பட்டுமிருந்த எல்லா ஆண் குழந்தைகளையும் கொன்றுவிட்டான்.

> 17 ''இராமாவிலே கூக்குரல் கேட்டது; அழுகையும் புலம்பலும் மிகுதி. இராகேல் தன் பிள்ளைகளுக்காக அழுதாள், அவை இல்லாமற்போனதால் அவள் துயரத்தின் மேலீட்டினால் ஆறுதல் பெறவும் மறுத்துவிட்டாள்''

18 என்று இறைவாக்குரைப்பவராகிய எரேமியாவின் மூலம் உரைக்கப்பட்டது அப்போது நிறைவேறிற்று.

## எகிப்திலிருந்து திரும்பி வருதல்

19 ஏரோது இறந்தபின், ஆண்டவருடைய தூதன் எகிப்தில் யோசேபுக்குக் கனவில் தோன்றி, 20 ''நீ எழுந்து குழந்தையையும் தாயையும் கூட்டிக்கொண்டு இஸ்ரவேல் நாட்டுக்குப் போ. குழந்தையின் உயிரை வாங்கப் பார்த்தவர்கள் இறந்துபோய்விட்டார்கள்'' என்றான். 21 யோசேப்பு விழித்தெழுந்தபின், குழந்தையையும் தாயையும் கூட்டிக்கொண்டு இஸ்ரவேல் நாட்டுக்கு வந்து சேர்ந்தார். 22 ஆனாலும், யூதேயாவில் அர்கெலாவு

* மேசியா என்கிற எபிரேயச் சொல் கிரேக்க மொழியில் கிறிஸ்து எனப்படும், இச்சொற்களுக்கு அபிடேகம் செய்யப்பட்டவர் என்பது பொருள்.

**2:6** மீகா. 5:2. **2:15** ஓசே. 11:1. **2:18** எரே. 3:15.

என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதுவுக்குப் பின் அரசாள்வதாகக் கேள்விப்பட்டு, அங்கே போக அஞ்சினார்; கனவில் சொல்லப்பட்ட படியே அவர் கலிலேயா நாட்டுக்குச் சென்றார்; 23 சென்று, நாசரேத்து என்னும் ஊரில் குடியேறினார். நசரேயன் எனப்படுவார் என்று இறைவாக்குரைப்போர் மூலமாக உரைக்கப்பட்டது இவ்வாறு நிறைவேறிற்று.

### திருமுழுக்குநர் யோவானது அறிவிப்பு

*(மாற். 1 : 1-8; லூக். 3 : 1-9, 15-17; யோ. 1 : 19-28)*

**3** அக்காலத்திலே திருமுழுக்குநர் யோவான் யூதேயாவின் பாலைநிலத்திற்கு வந்து, 2 ''மனமாற்றமடையுங்கள், விண்ணரசு நெருங்கியுள்ளது'' என்று அறிவித்து வந்தார். 3 இந்த யோவான் இறை வாக்குரைப்பவராகிய ஏசாயாவினால்,

''ஆண்டவருக்கு வழியை ஆயத்தம் செய்யுங்கள். அவருக்குமுன் பாதைகளைச் செவ்வையாக்குங்கள் என்பது பாலைநிலத்திலே கூக்குரலிடுகிறவனுடைய தொனி''

என்று குறிக்கப்பட்டவர். 4 இவர் ஒட்டக மயிர் உடையையும் அரையில் வார்க்கச்சையையும் அணிந்திருந்தார். வெட்டுக்கிளியும் காட்டுத் தேனுந்தான் இவருடைய உணவாயிருந்தன. 5 எருசலேமிலும் யூதேயா முழுவதிலும் யோர்தான் ஆற்றை அடுத்த நாடுகளனைத்திலும் இருந்தவர்கள் அவரிடம் போய், 6 தங்கள் பாவங்களை மறைக்காமல் சொல்லி ஒப்புக்கொண்டு, யோர்தான் ஆற்றில் அவரிடம் திருமுழுக்குப் பெற்றார்கள்.

7 பரிசேயருள்ளும் சதுசேயருள்ளும் பலர் திருமுழுக்குப் பெற வருவதை அவர் கண்டு, ''விரியன் பாம்பின் குட்டிகளே, வரப்போகும் தெய்வ சினத்திலிருந்து தப்பித்துக் கொள்ள இந்த வழியை உங்களுக்குக் காட்டினவன் யார்? 8 நீங்கள் மனமாற்றமடைந்தவர்களென்றால், அதை உங்கள் வாழ்க்கையில் காட்டுங்கள். 9 'ஆபிரகாமே நமக்குத் தந்தை' என்று உங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டிருக்க வேண்டாம். கடவுள் இந்தக் கற்களிலிருந்தும் ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை எழுப்ப வல்லவர் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். 10 ஏற்கெனவே மரங்களின் வேரை வெட்டக் கோடரியை ஓங்கியாயிற்று. நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டப்பட்டு நெருப்பிலே போடப்படும். 11 மனமாற்ற மடைதலுக்கென்று நான் தண்ணீரினால் திருமுழுக்குக் கொடுக்கிறேன். எனக்குப்பின் வருபவரோ என்னைவிட வல்லவர். அவருடைய மிதியடிகளைத் தூக்கிச் செல்லவும் எனக்குத் தகுதியில்லை; அவர் தூய ஆவியினாலும் நெருப்பினாலும் உங்களுக்குத் திருமுழுக்குக் கொடுப்பார். 12 தூற்றுக்கூடை ஒன்று அவர் கையில் இருக்கிறது. அவர் களத்தை முற்றிலும் துப்புரவாக்கி, தமது கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்ப்பார்; பதரை அவர் அவியாத நெருப்பில் எரித்தழிப்பார்'' என்றார்.

### இயேசு திருமுழுக்குப் பெறுதல்

*(மாற். 1 : 9-11; லூக். 3 : 21, 22)*

13 பிறகு, இயேசு யோவானிடம் திருமுழுக்குப் பெறுவதற்காகக் கலிலேயாவிலிருந்து யோர்தான் ஆற்றுக்கு வந்தார். 14 யோவானோ, ''நான் உம்மிடம் திருமுழுக்குப் பெறவேண்டியவனாயிருக்க, நீர் என்னிடம் வரலாமா?'' என்று சொல்லி அவரைத் தடுக்கப் பார்த்தார். 15 ஆனால் இயேசு, ''தற்போது இப்படி நடக்கட்டும். ஏனெனில், கடவுளுக்கு ஏற்றவையெனக் குறிக்கப்பட்டவை அனைத்தையும் இவ்வாறு நிறைவேற்றுவதே நமக்குத் தகுதியாகும்'' என்று பதில் சொல்ல, அவரும் இணங்கினார். 16 திருமுழுக்குப் பெற்றவுடனே இயேசு தண்ணீரைவிட்டு வெளியேறினார். அப்போது வானம் திறப்புண்டது; தெய்வ ஆவி புறாவைப்போல இறங்கித் தம்மீது வருவதை அவர் கண்டார். 17 வானத்தினின்று, ''இவர் என் அன்பார்ந்த மைந்தர். இவரால் பெருமகிழ்ச்சியடைகிறேன்'' என்று ஒரு வாக்குப் பிறந்தது.

### இயேசு சோதிக்கப்படுதல்

*(மாற். 1 : 12, 13; லூக். 4 : 1-13)*

**4** அப்பொழுது இயேசு பிசாசினால் சோதிக்கப்படுவதற்கு ஆவியானவரால் வனாந்தரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டார். 2 அங்கு அவர் நாற்பது நாள் அல்லும் பகலும் நோன்பிருந்தார். அதன்பின் அவருக்குப் பசியுண்டாயிற்று. 3 சோதிக்கிறவன் அவரிடம் வந்து, ''நீர் கடவுளின் மைந்தரானால், இந்தக் கற்களை அப்பங்களாகும்படி சொல்லும்'' என்றான். 4 அதற்கு அவர்,

'' 'மனிதன் வாழ்வது அப்பத்தினால் மட்டுமன்று; கடவுளின் திருவாயினின்று வரும் ஒவ்வொரு சொல்லாலும் உயிர் வாழ்வான்'

என்பது வேதத்தில் எழுதியுள்ளது'' என்று சொன்னார். 5 பிறகு பிசாசு அவரைத் திருநகரத்திற்குக் கொண்டுசென்று திருக்கோவிலின் உச்சியில் அவரை நிறுத்தி அவரிடம், 6 ''நீர் கடவுளின் மைந்தரானால், கீழே குதியும்; ஏனெனில்,

**2:23** மாற். 1:24; லூக். 9:39; யோ. 1:45. **3:2** மத். 4:17; மாற். 1:15; திருத்தூது. 2:38. **3:3** ஏசா. 40:3; யோ. 1:23. **3:4** 2 அர. 1:8. **3:7** மத். 12:34; 23:33. ஏசா. 59:5. **3:9** யோ. 8:33; ரோ. 9:7, 8. **3:10** மத். 7:19. **3:17** ஆதி. 22:2. சங். 2:7; ஏசா. 42:1; மத். 12:18; 17:5; மாற். 1:11; லூக் 9:35. **4:1** யாத். 24:18; 34:28; எபி. 2:18; 4:15. **4:4** உபா. 8:3. **4:6** சங். 91:12.

'அவர் உம்மைக் குறித்துத் தம்முடைய தூதருக்குக் கட்டளையிடுவார்;

உமது கால் கல்லிற்படாதபடி

அவர்கள் உம்மைத் தங்கள் கைகளில் தாங்கிக்கொள்வார்கள்'

என்று எழுதியுள்ளது'' என்று சொன்னான். 7 இயேசு அவனிடம், '''உன் கடவுளாகிய ஆண்டவரைச் சோதித்துப் பார்க்காதே' என்பதுந்தான் எழுதியுள்ளது'' என்றார். 8 மறுபடியும் பிசாசு அவரை மிகவும் உயர்ந்த ஒரு மலைமேல் கொண்டுசென்று, உலகத்தின் அரசுகள் அனைத்தையும் அவற்றின் மாட்சிமையையும் அவருக்குக் காட்டி, 9 ''நீர் கீழே விழுந்து என்னைப் பணிந்தால் இவை அனைத்தையும் உமக்குத் தந்திடுவேன்'' என்று சொன்னான். 10 அப்பொழுது இயேசு அவனிடம், ''சாத்தானே, அப்பாலே போ;

'உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி, அவர் ஒருவருக்கே சேவை செய்துவருவாயாக'

என்று எழுதியுள்ளதே'' என்றார். 11 பிறகு பிசாசு அவரை விட்டு நீங்கினான். அப்பொழுது தெய்வதூதர்கள் வந்து அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.

## கலிலேயாவில் ஊழியம் செய்யத் தொடங்குதல்

*(மாற். 1:14, 15; லூக். 4:14; 15)*

12 யோவான் சிறையில் வைக்கப்பட்டார் என்று கேள்விப்பட்டபின், இயேசு கலிலேயா நாட்டுக்குப் போய்விட்டார். 13 அவர் நாசரேத்தை விட்டு, செபுலோன் நப்தலி என்னும் நாடுகளின் கடற்கரைக்கு அருகிலுள்ள கப்பர்நகூம் என்னும் ஊருக்குப் போய் அங்கே தங்கினார். 14 இறைவாக்குரைப்பவராகிய ஏசாயா மூலமாக உரைக்கப்பட்டது இவ்வாறு நிறைவேறிற்று.

15 ''செபுலோன்நாடே, நப்தலிநாடே, யோர்தானுக்கு அப்புறத்திலுள்ள கடற்கரைப் பகுதியே,

கடவுட்பற்றில்லாதவர் வாழும் கலிலேயாவே,

16 இருளிலிருந்த மக்கள் பேரொளியைக் கண்டார்கள்.

மரண நிழல் சூழ்ந்த நாட்டிலிருந்தவர்களுக்கு ஒளி உதித்தது''

என்பது அவர் மூலமாக உரைக்கப்பட்டது.

17 அது முதல் இயேசு, ''மனமாற்றமடையுங்கள்; விண்ணரசு நெருங்கியுள்ளது'' என்று அறிவிக்கத் தொடங்கினார்.

## மீனவர் நால்வரை இயேசு அழைத்தல்

*(மாற். 1: 16-20; லூக். 5 : 1-11)*

18 இயேசு கலிலேயாக் கடலோரமாய் நடந்துபோன வேளையில், மீனவரான சகோதரர் இருவர் கடலில் வலைவீசிக்கொண்டிருந்ததைக் கண்டார். அவர்களுள் ஒருவர் பேதுரு எனப்பட்ட சீமோன்; மற்றவர் அவருடைய சகோதரன் அந்திரேயா. 19 இயேசு அவர்களைப் பார்த்து, ''நீங்கள் என் பின்னே வாருங்கள்; உங்களை மனிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேன்'' என்று சொன்னார். 20 உடனே அவர்கள் வலைகளை விட்டுவிட்டு அவரைப் பின்பற்றிச் சென்றார்கள். 21 அவர் அவ்விடம் விட்டு அப்பாற்சென்றபோது, செபெதேயுவின் மகன் யாக்கோபு, அவருடைய சகோதரன் யோவான் என்னும் வேறு இரு சகோதரரையும் கண்டார்; அவர்கள் தங்கள் தகப்பன் செபெதேயுவுடன் வலைகளைப் பழுதுபார்த்துக்கொண்டு படகிலிருந்தார்கள். 22 அவர்களையும் அழைத்தார். உடனே அவர்கள் தங்கள் படகையும் தகப்பனையும் விட்டுவிட்டு அவரைப் பின்பற்றிச் சென்றார்கள்.

## திரளான மக்களுக்குக் குணமளித்தல்

*(லூக். 6 : 17-19)*

23 பிறகு இயேசு கலிலேயா நாடெங்கும் சுற்றி, அவர்களுடைய தொழுகைக்கூடங்களில் போதித்து, அருளாட்சியின் நற்செய்தியை அறிவித்து, மக்களிடையே காணப்பட்ட எல்லா வகையான வாதைகளையும் பிணிகளையும் குணமாக்கி வந்தார். 24 அவருடைய புகழ் சீரியா நாடெங்கும் பரவிற்று. பேய் பிடித்தவர்கள், பைத்தியம் பிடித்தவர்கள், திமிர்வாதக்காரர், பலவகையான நோய்களாலும் வேதனைகளாலும் வருந்தியவர்கள் ஆகிய எல்லாப் பிணியாளிகளையும் அவரிடம் கொண்டு வந்தார்கள். அவர் அவர்களைக் குணமாக்கினார். 25 கலிலேயா, தெக்கப்போலி, எருசலேம், யூதேயா, யோர்தான் ஆற்றுக்கு அப்பாலுள்ள பகுதி ஆகிய இடங்களிலிருந்து மக்கள் கூட்டங் கூட்டமாய் வந்து அவர் கூடவே சென்றார்கள்.

## மலைமீது வழங்கிய அருளுரை

**5** இயேசு திரளான மக்கள் இருப்பதைக் கண்டு மலைமீது ஏறி அமர்ந்தார். அவருடைய சீடர்கள் அவரிடம் வந்தார்கள். 2 அவர் அவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளிய போதனையாவது :

## நற்பேறு பெற்றோர் யார்?

*(லூக், 6:20-23)*

3 தம் எளிய ஆன்மீக நிலையை உணர்ந்

**4:7** உபா. 6:16. **4:10** உபா. 6:13. **4:12** மத். 14:3; மாற். 6:17; லூக். 3:19, 20. **4:13** யோ. 2:12. 4:15, 16. ஏசா. 9:1,2. **4:17** மத். 3:2; மாற். 1:15. **4:23**; மத். 9:35; மாற். 1:39.

தவர்கள் நற்பேறு பெற்றவர்கள்: விண்ணரசு அவர்களுக்குரியது.

4 துயரத்தில் ஆழ்ந்திருக்கிறவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்களுக்குக் கடவுளின் ஆறுதல் கிடைக்கும்.

5 பணிவுடையவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் உலகத்தையே உடைமையாகப் பெறுவார்கள்.

6 நீதி நிலவ வேண்டுமென்பதில் மிகுந்த வேட்கை கொண்டவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; கடவுள் அவர்கள் வேட்கை நிறைவேறும்படி செய்வார்.

7 இரக்கம் காட்டுகிறவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; கடவுள் அவர்களுக்கு இரக்கம் காட்டுவார்.

8 தூய உள்ளமுடையவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் கடவுளைக் காண்பார்கள்.

9 அமைதி நிலவச் செய்கிறவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; அவர்கள் கடவுளின் மைந்தர்கள் எனப்படுவார்கள்.

10 நீதியின் பொருட்டுத் துன்புறுத்தப்படுகிறவர்கள் நற்பேறு பெற்றவர்கள்; விண்ணரசு அவர்களுக்குரியது.

11 என்பொருட்டு மக்கள் உங்களை இகழ்ந்து துன்புறுத்தி, உங்களைப்பற்றித் தீமையானவற்றையெல்லாம் பொய்யாகச் சொல்வார்களானால், நீங்கள் நற்பேறு பெற்றவர்களாவீர்கள். 12 மனமகிழ்ந்து களிகூருங்கள், விண்ணுலகில் உங்கள் பலன் மிகுதியாகும். உங்களுக்குமுன் வாழ்ந்த இறைவாக்குரைப்போரும் இவ்வாறே துன்புறுத்தப்பட்டனர்.

### உப்பும் ஒளியும்
(மாற். 9:50; லூக். 14:34, 35)

13 ''நீங்கள் உலகிற்கு உப்பாயிருக்கிறீர்கள். உப்புச் சாரத்தை இழந்துவிட்டால், எதைக்கொண்டு அதை மீண்டும் சாரமுள்ளதாக்க முடியும்? அதன்பின் அது ஒன்றுக்கும் உதவாது; வெளியே எறியப்பட்டு மனிதரால் மிதிக்கப்படும். 14 நீங்கள் உலகிற்கு ஒளியாயிருக்கிறீர்கள்; மலைமேல் இருக்கிற ஊர் மறைந்திராது. 15 யாரும் விளக்கை ஏற்றி ஒரு பாத்திரத்தின்கீழ் மறைத்து வைப்பதில்லை; அதை விளக்குத் தண்டின்மீதுதான் வைப்பர். அப்பொழுது அது வீட்டிலுள்ள யாவருக்கும் வெளிச்சம் தரும். 16 மனிதர் உங்களுடைய நற்செயல்களைக் கண்டு, விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையைப் புகழ்ந்துபோற்றும்படி உங்களுடைய ஒளியும் இவ்வாறே அவர்கள்முன் சுடர்வீசுவதாக.

### நீதிச்சட்டம் பற்றி

17 ''நான் நீதிச்சட்டத்தையோ இறைவாக்குகளையோ நீக்கிவிட வந்தேன் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். நீக்கிவிடுவதற்கன்று, நிறைவேற்றவே நான் வந்தேன். 18 உங்களுக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்: விண்ணும் மண்ணும் ஒழியாதிருக்கும் வரையில், நீதிச்சட்டத்திலுள்ள ஒரு சிறு எழுத்தோ ஓர் எழுத்தின் பகுதியோ ஒழியாது; அதன்படி நடக்கவேண்டிய யாவும் நடந்தே தீரும். 19 ஆகையால், இந்தத் திருக்கட்டளைகளுள் மிகச் சிறிதானதொன்றைத் தான் மீறுவதோடு மற்றவர்களும் அவ்வாறே நடக்கும்படி எவன் போதிக்கிறானோ, அவன் விண்ணரசில் மிகச் சிறியவன் எனப்படுவான். ஆனால், இவற்றைத் தானும் கடைப்பிடித்து அவ்வாறே பிறரும் செய்ய வேண்டுமென்று எவன் போதிக்கிறானோ, அவன் விண்ணரசில் பெரியவன் எனப்படுவான். 20 உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் நீதி வேத அறிஞர், பரிசேயர் எனப்படுபவர்களுடைய நீதியைவிட மிகவும் மேம்பட்டதாயிராவிட்டால், நீங்கள் விண்ணரசினுள் நுழையப்போவதேயில்லை.

### சினங்கொள்வதைப்பற்றி

21 '' 'கொலை செய்யாதே; கொலை செய்கிறவன் வழக்குமன்றத் தீர்ப்புக்கு ஆளாவான்' என்று முன்னோருக்குச் சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். 22 ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: தன் சகோதரன்மீது [காரணமின்றிச்]* சினங்கொள்கிறவன் எவனும் வழக்குமன்றத் தீர்ப்புக்கு ஆளாவான். தன் சகோதரனைப் பார்த்து, 'ஒன்றுக்கும் உதவாதவனே' என்று சொல்லுகிறவன் தலைமைச்சங்கத் தீர்ப்புக்கு ஆளாவான். 'மதிகேடனே' என்று சொல்லுகிறவன் எரி நரகத்துக்குள்ளாவான். 23 ஆகையால், நீ உன் காணிக்கையைப் படைக்கப் பீடத்தை நோக்கி வரும்போது, உன் சகோதரனுக்கு உன்மேல் மனவருத்தம் உண்டென்பது அங்கே உன் நினைவிற்கு வருமானால், 24 அப்பீடத்தினருகில் உன் காணிக்கையை வைத்துவிட்டுப் போய், முதலில் அந்தச் சகோதரனோடு நட்புறவு செய்துகொள்; பிறகு வந்து உன் காணிக்கையைச்செலுத்து. 25 உன் எதிரி உன்னை நீதிபதியினிடம் ஒப்படைக்காமலும், நீதிபதி உன்னைக் காவலனிடம் ஒப்படைக்காமலும், நீ சிறையில் அடைத்துவைக்கப்படாமலும் இருக்க வேண்டுமென்றால், உன் எதிரியோடு நீ நீதி

*குறிப்பு: [ ] இந்த அடைப்புக்குறி வரும் இடங்களிலெல்லாம் அதனுள் இருக்கும் சொற்கள் முக்கியமான பிரதிகளில் காணப்படவில்லை எனக் கொள்க.

**5:4** ஏசா. 61:2; **5:5** சங். 37:11. **5:6** ஏசா. 55:1,2 **5:8** சங். 24:3,4 **5:10** 1 பேது. 3:14. **5:11** 1 பேது. 4:14. **5:12** 2 வரலாறு. 36:16; திருத்தூது. 7:52. **5:13** மாற். 9:30; லூக். 14:34, 35. **5:14** யோ. 8:12; 9:5. **5:15** மாற். 4:21; லூக். 8:16; 11:33. **5:16** 1 பேது. 2:12. **5:18** லூக். 16:17. **5:21** யாத். 20:13; உபா. 5:17.

மன்றத்துக்குப் போகும்போதே அவனோடு சமரசம் செய்துகொள். *26* இல்லாவிடில், நான் உனக்கு உறுதியாகச் சொல்கிறேன் : நீ காசு முழுதும் கொடுத்துத் தீர்க்கும் வரையில் சிறையிலிருந்து வெளியேறவே மாட்டாய்.

### கற்புநெறி தவறுதலைப்பற்றி

*27* '' 'கற்புநெறி தவறாதே' என்று சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். *28* ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : ஒரு பெண்ணைக் கெட்ட எண்ணத்தோடு பார்க்கிற எவனும் தன் உள்ளத்தில் அவளிடம் கற்புநெறி தவறி நடந்துகொள்கிறான். *29* நீ பாவக் குழியில் இடறிவிழ உன் வலக்கண் காரணமாயிருந்தால் அதைப் பிடுங்கி எறிந்துவிடு; உன் உடல் முழுதும் நரகத்தில் எறியப் படுவதைவிட, உன் உறுப்புகளுள் ஒன்றை நீ இழப்பதே உனக்கு நலம். *30* நீ பாவக் குழியில் இடறிவிழ உன் வலக்கை காரணமாயிருந்தால் அதைத் தறித்து எறிந்துவிடு. உன் உடல் முழுதும் நரகத்துக்குள் போவதைவிட, உன் உறுப்புகளுள் ஒன்றை நீ இழப்பதே மேல்.

### மனைவியை விலக்கி விடுதலைப்பற்றி

(மத். 19 : 9; மாற். 10 : 11, 12; லூக். 16 : 18)

*31* '' 'தன் மனைவியை விலக்கிவிடும் எவனும் அவளுக்கு விலக்குச் சீட்டைக் கொடுத்து விலக்க வேண்டும்' என்று சொல்லப்பட்டது. *32* ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: ஒருவன் தன் மனைவியை அவளது கற்புநெறி தவறிய நடத்தையின் பொருட்டேயன்றி வேறெந்தக் காரணத்திற்காகவும் விலக்குதல் கூடாது. அப்படி ஒருவன் விலக்கிவிடுவானானால், அவன் அவளைக் கற்புநெறி தவறினவளாகும்படி செய்கிறான். கணவனால் விலக்கப்பட்டவளை யார் மணம் செய்கிறானோ அவன் கற்பு நெறி தவறினவனாவான்.

### ஆணையிடுதலைப்பற்றி

*33* ''மேலும், 'ஆணையிட்டுக் கூறும் எதையும் நிறைவேற்றத் தவறாதே; ஆணையிட்டு நேர்ந்துகொண்ட யாவற்றையும் ஆண்டவருக்குச் செலுத்து' என்று முன்னோருக்குச் சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். *34* ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : ஆணையிட்டுக் கூறவே வேண்டாம்; வானத்தின்மேலும் ஆணையிட வேண்டாம்; ஏனெனில், அது கடவுளின் அரியணை. *35* பூமியின்மேலும் ஆணையிட வேண்டாம். ஏனெனில், அது அவரது பாதப்படி; எருசலேம் மேலும் ஆணையிட வேண்டாம். ஏனெனில், அது விண்ணரசரின் நகரம். *36* உன் தலைமேலும் ஆணையிட வேண்டாம். ஏனெனில், உன் தலை முடியுள் ஒன்றையேனும் வெண்மையாக்கவோ கறுப்பாக்கவோ உன்னால் இயலாது. *37* நீங்கள் 'உண்டு' அல்லது 'இல்லை' என்று மட்டும் சொல்லுங்கள். இதற்கு மிஞ்சிச் சொல்வதெல்லாம் *தீமையால் விளைவதாகும்.

### பழிவாங்குதலைப்பற்றி

( லூக். 6: 29, 30)

*38* '' 'கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல்' என்று சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். *39* ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: உனக்குத் தீங்கு செய்பவனைத் தடுத்து நிறுத்த வேண்டாம். உன்னை வலக் கன்னத்தில் அறைகிறவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு. *40* ஒருவன் உன்னோடு வழக்காடி உன் துண்டை எடுத்துக்கொள்ள விரும்பினால், அவனுக்கு உன் சட்டையையும் எடுத்துக் கொள்ள இடங்கொடு. *41* ஒருவன் உன்னை ஒரு மைல் தொலைவு வரும்படி கட்டாயப் படுத்தினால், அவனோடு இரண்டு மைல் தொலைவு செல். *42* உன்னிடம் கேட்கிறவனுக்குக் கொடு, உன்னிடம் கடன் வாங்க விரும்புகிறவனுக்கு அதை மறுக்காதே.

### எதிரிகளிடம் அன்புகொள்

(லூக். 6 : 27, 28, 32–36)

*43* ''' அடுத்தவனிடம் அன்புகொள்; உன்னுடைய எதிரியையோ பகை' என்று சொல்லப்பட்டதெனக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். *44* ஆனால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் : உங்கள் எதிரிகளிடம் அன்புகொள்ளுங்கள்; [உங்களைச் சபிக்கிறவர்களுக்கு ஆசி கூறுங்கள்; உங்களை வெறுக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள் ; உங்களைத் தூற்றுகிறவர்களுக்காகவும்] உங்களைத் துன்புறுத்துகிறவர்களுக்காகவும் கடவுளிடம் வேண்டுதல் செய்யுங்கள். *45* இப்படிச் செய்வதால் விண்ணுலகிலுள்ள உங்கள் தந்தைக்கு நீங்கள் பிள்ளைகளாவீர்கள்; அவர் தீயோர் மேலும் நல்லோர் மேலும் கதிரவனை ஒளிவீசச் செய்கிறார். நீதிநெறியைக் கடைப்பிடிப்போருக்கும் கடைப்பிடியாதோருக்கும் மழை பெய்யச் செய்கிறார். *46* உங்களிடம் அன்புள்ளவர்களாய் இருப்பவர்களிடமே நீங்கள் அன்பு

* 'தீமைக்குக் காரணமாகிய பிசாசினால் விளைவதாகும்' என்றும் மொழி பெயர்க்கலாம்.

**5:27** யாத். 20:14; உபா. 5:18. **5:29** மத். 18:9; மாற். 9:47. **5:30** மத். 18:8; மாற். 9:43 **5:31** உபா. 24:1-4; மத். 19:7; மாற். 10:4. **5:32** மத். 19:9. மாற். 10:11, 12; லூக். 16:18; 1 கொரி. 7:10, 11. **5:33** இலே. 19:12; எண். 30:2; உபா. 23:21. **5:34** யாக். 5:12. **5:38** யாத். 21:24; இலே. 24:20; உபா. 19:21. **5:43** இலே. 19:18.

கொள்வீர்களானுல், உங்களுக்கு என்ன பலன்? *ஆயக்காரரும் இப்படித்தானே செய்கிருர்கள்? 47 உங்களுடைய சகோதரருக்கு மட்டும் வணக்கம் சொல்வீர்களானுல் நீங்கள் செய்வதில் என்ன சிறப்பு இருக்கிறது? கடவுளை அறியாத பிற இனத்தவர்களும் இப்படித்தானே செய்கிருர்கள்? 48 எனவே, விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையார் எல்லா நற்பண்பும் நிறைந்தவராய் இருப்பது போல நீங்களும் எல்லா நற்பண்பும் நிறைந்தவர்களாய் இருங்கள்.

### சமயச் சடங்குகள் செய்யும் முறை

**6** ''நீங்கள் உங்கள் சமயச் சடங்குகளை மனிதர் பார்க்க வேண்டுமென்று அவர்கள்முன் செய்யாதபடி பார்த்துக்கொள்ளுங்கள். இல்லையென்ருல், விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையாரிடமிருந்து உங்களுக்குப் பலன் கிடைக்காது.

2 ''எனவே, நீ ஏழைக்கு உதவி செய்யும்போது, போலி பக்தர்கள் தொழுகைக்கூடங்களிலும் தெருக்களிலும் மனிதர் புகழ வேண்டுமென்று செய்வது போல, உனக்குமுன் பறைசாற்றும்படி செய்யாதே. அவர்கள் தங்கள் பலனைப் பெற்றுவிட்டார்கள் என்பதை உங்களுக்குத் திட்டமாகச் சொல்லுகிறேன். 3 நீ ஏழைக்கு உதவி செய்யும்போது, உன் வலக்கை செய்வது இடக்கைக்குத் தெரியாதிருக்கட்டும். 4 அப்பொழுது உன்னுடைய அறச்செயல் மறைவாயிருக்கும். மறைவாயுள்ளதைக் காணும் உன் தந்தையார் அதற்காக உனக்குக் கைம்மாறு அளிப்பார்.

### கடவுளிடம் வேண்டுதல் செய்யும் முறை
*(லூக். 11:2—4)*

5 ''நீங்கள் கடவுளிடம் வேண்டுதல் செய்யும்போது போலி பக்தரைப்போலச் செய்ய வேண்டாம். ஏனெனில், அவர்கள் தொழுகைக்கூடங்களிலும் தெருச்சந்திகளிலும் நின்றுகொண்டு, மனிதர் பார்க்க வேண்டுமென்று கடவுளிடம் வேண்டுதல் செய்ய விரும்புகிருர்கள். அவர்கள் தங்கள் பலனைப் பெற்றுவிட்டார்கள் என்பதை உங்களுக்குத் திட்டமாகச் சொல்லுகிறேன். 6 நீ கடவுளிடம் வேண்டுதல் செய்யும்போது உன் அறைக்குள் சென்று கதவை அடைத்துக்கொண்டு, கண்ணுக்கு மறைவாயுள்ள உன் தந்தையாரை நோக்கி வேண்டுதல் செய்; மறைவாயுள்ளதைக் காணும் உன் தந்தையாரும் உனக்குக் கைம்மாறு அளிப்பார். 7 அல்லாமலும், நீங்கள் கடவுளிடம் வேண்டுதல் செய்யும்போது பிற இனத்தவரைப்போல, வீண் சொற்களைச் சொல்லி உளறிக்கொண்டிருக்க வேண்டாம். ஏராளமான சொற்களைப் பயன்படுத்துவதால் தாங்கள் வேண்டிக்கொள்வது அருளப்படுமென்று அவர்கள் நினைக்கிருர்கள். 8 நீங்கள் அவர்களைப்போலச் செய்ய வேண்டாம். நீங்கள் வேண்டிக்கொள்வதற்கு முன்னமே, உங்களுக்கு என்னென்ன தேவையென்பது உங்கள் தந்தையாருக்குத் தெரியும். 9 ஆகையால், நான் சொல்லித் தருகிறபடி அவரிடம் வேண்டுதல் செய்யுங்கள் :

விண்ணுலகிலிருக்கிற எங்கள் தந்தையே,
உமது திருப்பெயர் தூயதெனப் போற்றப்படுவதாக;

*10* உமது அருளாட்சி வருவதாக ;
உமது திருவுளம் விண்ணுலகில் நிறைவேறுவதுபோல மண்ணுலகிலும் நிறைவேறுவதாக.

*11* அன்றன்று எங்களுக்கு வேண்டிய உணவை இன்று எங்களுக்குத் தந்தருளும்.
*12* †எங்களுக்குத் தீமை செய்தவர்களை நாங்கள் மன்னித்திருக்கிறது போல நாங்கள் செய்த தீமைகளை எங்களுக்கு மன்னித்தருளும்.

*13* எங்களைச் சோதனைக்கு உட்படுத்தாதேயும்;

‡ தீமையினின்று எங்களை விடுவித்தருளும்;

[ஆட்சியும் வல்லமையும் மாட்சிமையும் என்றென்றைக்கும் உம்முடையவையே,]
ஆமேன்.

*14* ''மனிதருடைய குற்றங்களை நீங்கள் மன்னிப்பீர்களானுல், உங்கள் விண்ணகத் தந்தையும் உங்களை மன்னிப்பார்; *15* மனிதரை நீங்கள் மன்னிக்காவிடில், உங்கள் விண்ணகத் தந்தையும் உங்கள் குற்றங்களை மன்னிக்க மாட்டார்.

### நோன்பு இருக்கும் முறை

*16* ''மேலும், நீங்கள் நோன்பு இருக்கும்போது போலி பக்தரைப்போல முக வாட்டத்தோடு இருக்க வேண்டாம்; தாங்

*ஆயக்காரர்: சுங்கவரி வசூலிக்கும் இவர்கள் அன்னிய ஆட்சியின் கையாள்களாய் இருந்ததால், இழிவாகக் கருதப்பட்டார்கள்.

† 'எங்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தவறியவர்களை நாங்கள் மன்னித்திருக்கிறது போல, நாங்கள் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தவறிய குற்றங்களை எங்களுக்கு மன்னித்தருளும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

‡ 'தீயோனிடமிருந்து' (அதாவது தீமைக்குக் காரணமாகிய பிசாசினிடமிருந்து) என்றும் மொழிபெயர்க்கலாம்.

**5:48** இலே. **19:2**; உபா. 18:13; 1 யோ. 3:3. **6:5** லூக் 18:10-14. **6:14,15** மாற். 11:25,26.

கள் நோன்பு இருப்பதை மனிதர் பார்க்க வேண்டுமென்றே அவர்கள் தங்கள் முகத்தை விகாரப்படுத்திக்கொள்கிறார்கள். அவர்கள் தங்கள் பலனைப் பெற்றுவிட்டார்கள் என்பதைத் திட்டமாக உங்களுக்குச் சொல்லுகிறேன். *17* நீ நோன்பு இருக்கும்போது முகத்தைக் கழுவு, தலைக்கு எண்ணெய் தடவு. *18* அப்படிச் செய்தால், நீ நோன்பு இருப்பது மனிதருக்குத் தெரியாது; கண்ணுக்கு மறைவாயிருக்கிற உன் தந்தையாருக்குத்தான் தெரியும். மறைவாயுள்ளதைக் காணும் உன் தந்தையாரும் உனக்குக் கைம்மாறு அளிப்பார்.

### உண்மைச் செல்வம்

*(லூக். 12 : 33, 34)*

*19* ''மண்ணுலகில் உங்களுக்கெனச் செல்வத்தைச் சேமித்து வைக்க வேண்டாம். இங்கே பூச்சியும் துருவும் அழிவை உண்டாக்கும், திருடர்களும் கன்னமிட்டுத் திருடுவார்கள். *20* விண்ணுலகில் உங்களுக்குச் செல்வத்தைச் சேமித்து வையுங்கள். அங்கே பூச்சியோ துருவோ அழிப்பதில்லை, திருடர்களும் கன்னமிட்டுத் திருடுவதில்லை. *21* எங்கே உங்கள் செல்வம் இருக்கிறதோ அங்கே உங்கள் மனமும் இருக்கும்.

### உடலுக்கு விளக்கு

*(லூக். 11 : 34–36)*

*22* ''கண்தான் உடலுக்கு விளக்கு. உன் கண் தெளிவாயிருக்குமானால், உன் உடல் முழுதும் ஒளியுள்ளதாயிருக்கும். *23* உன் கண் பொல்லாததாயிருந்தால், உன் உடல் முழுதும் இருளுள்ளதாயிருக்கும். எனவே, உன்னிலுள்ள ஒளியே இருளாயிருந்தால், அந்த இருள் எவ்வளவு இருளாயிருக்க வேண்டும்!

### கடவுளா ? உலகப் பொருளா ?

*(லூக். 16 : 13)*

*24* ''இரு தலைவர்களுக்கு வேலைக்காரனாயிருக்க எவனாலும் இயலாது. ஏனென்றால், அவன் ஒருவரைப் பகைத்து மற்றவரிடம் அன்புகொள்வான்; அல்லது ஒருவரோடு சேர்ந்துகொண்டு மற்றவரைப் புறக்கணிப்பான். உங்களால் ஒரே சமயத்தில் கடவுளுக்கும் உலகப் பொருளுக்கும் வேலை செய்கிறவர்களாயிருக்க இயலாது.

### கவலைப்பட வேண்டாம்

*(லூக். 12:22–34)*

*25* ''ஆகையால் உங்களுக்குச் சொல்லுகிறேன்: உயிர் வாழ்வதற்கு என்ன உண்போம், என்ன குடிப்போம் என்றோ, உடலை மூட என்ன உடுப்போம் என்றோ கவலைப்படாதீர்கள். உணவைவிட உயிரும், உடையைவிட உடலும் உயர்ந்தவையல்லவா? *26* வானத்துப் பறவைகளைப் பாருங்கள்; அவை விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை, களஞ்சியத்தில் சேர்த்துவைப்பதுமில்லை. ஆயினும், உங்கள் விண்ணகத் தந்தையார் அவற்றிற்கு உணவளிக்கிறார். அவற்றைவிட நீங்கள் எவ்வளவோ மேலானவர்களல்லவா? *27* கவலைப்படுவதனால் தன் வளர்த்தியோடு ஒரு முழத்தைக் கூட்ட உங்களுள் யாரால் இயலும்? * *28* உடைக்காகவும் நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள் ? காட்டு மலர்கள் எப்படி உண்டாகின்றன என்பதைக் கவனியுங்கள். அவை உழைப்பதுமில்லை நூற்பதுமில்லை; *29* ஆயினும், சாலொமோன்கூடத் தன் முழு மாட்சிமையிலும் அவற்றுள் ஒன்றைப்போலவும் உடுத்தியிருந்ததில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். *30* அற்ப நம்பிக்கை உள்ளவர்களே, இன்றைக்கிருந்து நாளைக்கு அடுப்பில் எறியப்படும் காட்டுப் புல்லுக்கே கடவுள் இவ்வாறு உடுத்துகிறார் என்றால், உங்களுக்கு அவர் உடுத்துவது எவ்வளவு திண்ணம்! *31* ஆகையால் என்ன உண்போம், என்ன குடிப்போம், என்ன உடுப்போம் என்று கவலைப்பட வேண்டாம். *32* ஏனெனில், இவையெல்லாம் உங்களுக்குத் தேவை என்பது உங்கள் விண்ணகத் தந்தையாருக்குத் தெரியும். இவற்றையெல்லாம் கடவுளை அறியாத பிற இனத்தவர்களே நாடுவார்கள். *33* நீங்கள் எல்லாவற்றிற்கும் மேலாக, கடவுளின் ஆட்சிக்குட்படுவதையும், அவரது நீதி நெறிப்படி நடப்பதையும் முழு ஆர்வத்தோடு நாடுங்கள்; அப்பொழுது இவையனைத்தும் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும். *34* ஆகையால் நாளைக்காகக் கவலைப்பட வேண்டாம்; நாளைக்காகக் கவலைப்படுதலை நாளைக்கு வைத்துக்கொள்ளலாம். அந்தந்த நாளுக்கு அதனதன் தொல்லை போதும்.

### பிறருக்குத் தீர்ப்பளித்தல்

*(லூக். 6:37, 38, 41, 42)*

**7** ''நீங்கள் குற்றவாளிகளென்ற தீர்ப்புப் பெறுதிருக்க வேண்டுமானால், பிறரைக் குற்றவாளிகளென்று தீர்ப்புக் கூறாதீர்கள். *2* ஏனெனில், நீங்கள் பிறருக்கு அளிக்கும் தீர்ப்பின்படியே உங்களுக்கும் தீர்ப்பளிக்கப்படும்; நீங்கள் பிறருக்கு அளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அளக்கப்படும். *3* நீ உன் கண்ணிலுள்ள தூலத்தைக் கவனியாமல், உன் சகோதரன் கண்ணிலுள்ள துரும்பின்மேல் ஏன் கவனம் செலுத்துகிறாய்?

*'தன் ஆயுளோடு ஒரு நாளைக் கூட்ட உங்களுள் யாரால் இயலும்' என்றும் மொழிபெயர்க்கலாம்.

**6:19** யாக். 5:2, 3. **6:29.** *1* அர 10:1-29. **7:2** மாற் 4:24.

4 அல்லது நீ உன் சகோதரனிடம், 'உன் கண்ணிலுள்ள துரும்பை எடுத்துவிடுகிறேன்' என்று எப்படிச் சொல்லலாம்? உன் கண்ணிலேதான் தூலம் இருக்கிறதே! 5 போலி பக்தனே, முதலில் உன் கண்ணிலுள்ள தூலத்தை எடுத்துவிடு; பிறகு உன் சகோதரன் கண்ணிலுள்ள துரும்பை எடுக்க உனக்குத் தெளிவான பார்வை கிடைக்கும்.

6 ''தூய்மையான எதையும் நாய்களுக்குக் கொடாதீர்கள்; உங்களிடமுள்ள முத்துகளைப் பன்றிகள்முன் போடாதீர்கள்; போட்டால், அவை தங்கள் கால்களால் அவற்றை மிதித்துவிட்டுத் திரும்பி உங்களைப் பீறிவிடும்.

### கேளுங்கள், தேடுங்கள், தட்டுங்கள்

*(லூக். 11:9–13)*

7 ''கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டுபிடிப்பீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும். 8 கேட்கிறவன் எவனும் பெற்றுக்கொள்கிறான்; தேடுகிறவன் கண்டுபிடிக்கிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். 9 உங்களுள் யாராவது தன் மகன் அப்பம் கேட்டால் அவனுக்குக் கல்லைக் கொடுப்பானா? 10 அல்லது மீனைக் கேட்டால் பாம்பைக் கொடுப்பானா? 11 பொல்லாராகிய நீங்களே உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல பொருள்களை நன்கொடையாக வழங்க அறிந்திருக்கிறீர்களென்றால், விண்ணுலகிலிருக்கிற உங்கள் தந்தையார் தம்மிடம் கேட்கிறவர்களுக்கு நலமானவற்றைக் கொடுப்பது எவ்வளவு திண்ணம்!

### பொன்னான விதி

12 ''பிறர் உங்களுக்கு என்னென்ன செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அவற்றையெல்லாம் நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். நீதிச்சட்டம், இறைவாக்குகள் ஆகியவற்றின் செம்பொருள் இதுவே.

### இடுக்கான வாயில்

*(லூக். 13:24)*

13 ''இடுக்கான வாயில் வழியாக உட்செல்லுங்கள்; அழிவுக்குச் செல்லும் வாயில் அகலமானது, வழி விரிவானது; அந்த வழியாக உட்செல்பவர் பலர். 14 ஏனென்றால், மெய்வாழ்வுக்குச் செல்லும் வாயில் இடுக்கானது, வழி ஒடுக்கமானது; அதைக் கண்டுபிடிப்போரும் சிலரே.

### மரமும் கனியும்

*(லூக். 6:43, 44)*

15 ''பொய்யாக இறைவாக்குரைப்போரைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் ஆட்டுத் தோலைப் போர்த்துக்கொண்டு உங்களிடம் வருவார்கள். ஆனால், உள்ளுக்கோ அவர்கள் பீறித் தின்னும் ஓநாய்கள். 16 அவர்களுடைய செயல் விளைவுகளைக்கொண்டே அவர்களை அறிந்துகொள்வீர்கள். முட்செடிகளில் திராட்சைப் பழங்களையும், நெருஞ்சிச் செடிகளில் அத்திப் பழங்களையும் பறிப்பாருண்டோ? 17 நல்ல மரமெல்லாம் நல்ல கனிகளைக் கொடுக்கும்; நச்சு மரம் நச்சுக் கனிகளைக் கொடுக்கும். 18 நல்ல மரம் நச்சுக் கனிகளைக் கொடாது. நச்சு மரம் நல்ல கனிகளைக் கொடாது. 19 நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டப்பட்டு நெருப்பில் இடப்படும். 20 அதனாலேதான், அவர்களுடைய செயல் விளைவுகளைக்கொண்டே அவர்களை நீங்கள் அறிந்துகொள்வீர்கள் என்றேன்.

### சொல்லும் செயலும்

*(லூக். 13:25–27)*

21 ''என்னை நோக்கி, 'ஆண்டவரே, ஆண்டவரே' என்று கூப்பிடுகிற எல்லாருமே விண்ணரசிற்குள் செல்லப்போவதில்லை, விண்ணுலகிலிருக்கிற என் தந்தையாரின் திருவுளத்தின்படி செய்கிறவனே அங்கே செல்வான். 22 அந்நாளில் * பலர் என்னை நோக்கி, 'ஆண்டவரே, ஆண்டவரே, உமது பெயரால் நாங்கள் திருவாக்குகள் உரைத்தோமே, உமது பெயரால் பேய்களை ஓட்டினோமே, உமது பெயரால் பல வல்லமைச் செயல்களைச் செய்தோமே' என்பார்கள். 23 அப்பொழுது நான் அவர்களிடம், 'ஒரு போதும் நான் உங்களை அறிந்ததில்லை; நெறிகேடான செயல்களைச் செய்கிறவர்களே, என்னை விட்டு அகன்று போங்கள்' என்று தீர்ப்புக் கூறிவிடுவேன்.

### இருவகையான வீடுகள்

*(லூக். 6:47–49)*

24 ''எனவே, நான் சொன்ன இந்த மொழிகளைக் கேட்டு இவற்றின்படி செய்கிற எவனும் கற்பாறைமீது தன் வீட்டைக் கட்டின அறிவாளியை ஒத்திருக்கிறான். 25 பெருமழை சொரிந்து வெள்ளம் வந்தது; புயற்காற்றும் வீசிற்று. அவை அந்த வீட்டின்மீது மோதியும், அது விழவில்லை; ஏனெனில், அதன் அடித்தளம் கற்பாறைமீது எழுப்பப்பட்டிருந்தது. 26 நான் சொன்ன இந்த மொழிகளைக் கேட்டு, இவற்றின்படி செய்யாதிருக்கிற எவனும் மணல்மீது தன் வீட்டைக் கட்டின அறிவிலியை ஒத்திருக்கிறான். 27 பெருமழை சொரிந்து வெள்ளம் வந்தது; புயற்காற்றும் வீசிற்று. அவை அந்த வீட்

* இறுதித் தீர்ப்பு நாளில்.

**7:12** லூக். 6:31. **7:19** மத் 3:10; லூக். 3:9; யோ. 15:6. **7:23** சங். 6:8.

டின்மீது மோதவே, அது விழுந்து முற்றிலும் அழிந்தது.''

28 இயேசு இப்படிக் கூறி முடித்தபோது, மக்கள் அவருடைய போதனையைக் குறித்து வியப்படைந்தார்கள். 29 அவர் அவர்களிடையே இருந்த வேத அறிஞரைப்போலப் போதியாமல் அதிகாரமுள்ளவராய்ப் போதித்து வந்தார்.

### தொழுநோயுள்ள ஒருவனைக் குணமாக்குதல்

*(மாற். 1:40–45; லூக். 5:12–16)*

**8** இயேசு மலையிலிருந்து இறங்கினபின், திரளான மக்கள் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள். 2 அப்பொழுது தொழுநோயுள்ள ஒருவன் வந்து அவரைப் பணிந்து, ''ஆண்டவரே, உமக்கு மனமுண்டானால் என்னைக் குணமாக்க உம்மால் ஆகும்'' என்று சொன்னான். 3 அவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டு, ''எனக்கு மனமுண்டு, நீ குணமடைவாயாக'' என்றார். உடனே அவன் தொழுநோய் நீங்கிக் குணமடைந்தான். 4 இயேசு அவனிடம், ''இதை யாருக்கும் சொல்லாதே, எச்சரிக்கையாயிரு; ஆனால் ஆசாரியரிடம் போய் உன்னைக் காட்டி, மக்களுக்கு உன்னைக் குறித்துச் சான்றுதரும் வகையில், மோசே கட்டளையிட்டுள்ள காணிக்கையைச் செலுத்து'' என்று சொன்னார்.

### நூற்றுவர் தலைவனின் வேலைக்காரன் குணமடைதல்

*(லூக். 7:1–10; யோ. 4:43–54)*

5 இயேசு கப்பர்நகூம் என்னும் ஊருக்குள் சென்றபோது, நூற்றுவர் தலைவன் ஒருவன் அவரிடம் உதவி நாடிவந்து, 6 ''ஐயா, என் வேலைக்காரன் திமிர்வாதத்தினால் தாங்கொணா நோவுடன் வீட்டில் கிடக்கிறான்'' என்றான். 7 இயேசு, ''நான் வந்து அவனைக் குணப்படுத்துகிறேன்'' என்று சொன்னார். 8 நூற்றுவர்தலைவனோ, ''ஐயா, நீர் என் வீட்டிற்குள் வர நான் தகுதியற்றவன்; ஒரு வார்த்தை மட்டும் சொல்லும், அப்பொழுது என் வேலைக்காரன் குணமடைவான். 9 நான் அதிகாரத்திற்குட்பட்ட மனிதன்தான்; எனக்குக் கீழேயும் படைவீரர் உண்டு; நான் ஒருவனிடம், 'போ' என்கிறேன்; அவன் போகிறான்; வேறொருவனிடம், 'வா' என்கிறேன்; அவன் வருகிறான்; என் அடிமையிடம், 'இதைச் செய்' என்கிறேன், அவன் செய்கிறான்'' என்றான். 10 அதைக் கேட்டு இயேசு வியப்படைந்து, தமக்குப்பின் வந்துகொண்டிருந்தவர்களை நோக்கி, ''ஒன்றைத் திட்டமாக உங்களுக்குச் சொல்லுகிறேன்: இத்தகைய நம்பிக்கையை நான் இஸ்ரவேலருள் எவரிடமும் கண்டதில்லை. 11 கிழக்கிலும் மேற்கிலுமிருந்து பலர் வந்து, விண்ணரசில் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடன் பந்தியில் அமர்வர். 12 ஆனால் அந்த அரசின் உரிமையாளர்களோ புறம்பேயுள்ள இருளிலே தள்ளப்படுவார்கள். அங்கே அழுகையும் பற்கடிப்பும் இருக்கும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்'' என்றார். 13 பிறகு இயேசு நூற்றுவர் தலைவனைப் பார்த்து, ''நீ போகலாம், நீ நம்பினபடியே நடக்கும்'' என்று சொன்னார். அவ்வேளையிலேயே அவன் வேலைக்காரன் குணமடைந்தான்.

### இயேசு பலருக்குக் குணமளித்தல்

*(மாற். 1:29–34; லூக். 4:38–41)*

14 இயேசு பேதுருவின் வீட்டிற்குள் சென்றபோது அவருடைய மாமி காய்ச்சலாய்க் கிடக்கிறதைக் கண்டார். 15 அவர் அவளுடைய கையைத் தொட்டார், காய்ச்சலும் அவளை விட்டு நீங்கிற்று. அவள் எழுந்து அவருக்குப் பணிவிடை செய்தாள். 16 மாலை நேரம் வந்தபோது, பேய்பிடித்த பலரை அவரிடம் கொண்டுவந்தார்கள். அவர் பேய்களைத் தமது சொல்லைக் கொண்டே ஓட்டினார், பிணியாளிகள் எல்லாரையும் குணமாக்கினார்.

> 17 ''அவர்தாமே நம்முடைய நோய்களை அகற்றினார், நம்முடைய பிணிகளைச் சுமந்தார்''

என்று இறைவாக்குரைப்பவராகிய ஏசாயா மூலமாக உரைக்கப்பட்டது இவ்வாறு நிறைவேறிற்று.

### இயேசுவைப் பின்பற்றிச் செல்ல விரும்பினவர்கள்

*(லூக். 9:57–62)*

18 இயேசு தம்மைச் சுற்றிலுமிருந்த கூட்டத்தைக் கண்டபோது மறுகரைக்குச் செல்லக் கட்டளையிட்டார். 19 அப்பொழுது வேத அறிஞன் ஒருவன் வந்து, ''போதகரே, நீர் எங்கே சென்றாலும் நான் உம்மைப் பின்பற்றி வருவேன்'' என்றான். 20 அதற்கு இயேசு, ''நரிகளுக்கு வளைகள் உண்டு; வானத்துப் பறவைகளுக்குக் கூடுகள் உண்டு; மனுமைந்தருக்கோ தலைசாய்க்கவும் இடமில்லை'' என்றார். 21 பிறகு அவருடைய சீடருள் வேறொருவன் அவரை நோக்கி, ''ஆண்டவரே, முதலில் நான் போய் என் தகப்பனை அடக்கம் செய்துவிட்டு வர விடைகொடும்'' என்றான். 22 இயேசு அவனிடம், ''இறந்தோர் தம் இறந்தோரை அடக்கம் செய்யட்டும்; நீ என்னைப் பின்பற்றி வா'' என்று சொன்னார்.

**7-28, 29** மாற் 1:22; லூக். 4:32; யோ. 7:15. **8:4** இலே. 14:1-32 **8:11** லூக். 13:29, **8:12** மத். 22-13; 25:30; லூக்.13:28. **8:17** ஏசா. 53:4; யோ. 1:29,

### கடற் கொந்தளிப்பை அடக்குதல்
*(மாற். 4:35–41; லூக். 8:22–25)*

23 அவர் படகில் ஏறினதும், அவருக்குப் பின்னால் அவருடைய சீடர்களும் வந்து ஏறினார்கள். 24 சிறிது நேரத்திற்குப்பின் கடலில் மாபெரும் கொந்தளிப்பு உண்டாயிற்று. படகின்மேல் அலைகள் கவிந்தன. இயேசுவோ தூங்கிக்கொண்டிருந்தார். 25 சீடர்கள் அவரை அணுகி, ''ஆண்டவரே, காப்பாற்றும், மடிந்து போகிறோம்!'' என்று அவரை எழுப்பினார்கள். 26 அதற்கு அவர், ''அற்ப நம்பிக்கை உள்ளவர்களே, ஏன் அஞ்சுகிறீர்கள்?'' என்று கேட்டுவிட்டு, எழுந்து காற்றையும் கடலையும் அதட்டினார். 27 மிகுந்த அமைதி உண்டாயிற்று. எல்லாரும் வியப்புற்று, ''இவர் எப்படிப்பட்டவரோ! காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே!'' என்றார்கள்.

### பேய்பிடித்த இருவரைக் குணமாக்குதல்
*(மாற். 5:1–20; லூக். 8:26–39)*

28 இயேசு மறுகரையிலுள்ள கதரேனர் நாட்டிற்குப் போனபோது, பேய் பிடித்த இருவர் கல்லறைகளிலிருந்து வெளியேறி அவருக்கு எதிரே வந்தனர். அவர்கள் மிகவும் கொடியவர்களாயிருந்ததால், அவ்வழியே எவராலும் போக இயலாதிருந்தது. 29 அவர்கள், ''கடவுளின் மைந்தரே, எங்களிடம் உமக்கு என்ன வேலை? குறித்த காலம் வருமுன்னே எங்களை வதைக்கவா இங்கே வந்தீர்?'' என்று கத்தினார்கள். 30 அவர்களிடமிருந்து சற்றுத் தொலைவில் பன்றிகள் பெருங் கூட்டமாய் மேய்ந்து கொண்டிருந்தன. 31 பேய்கள் அவரிடம், ''நீர் எங்களை ஓட்டுவதாயிருந்தால், நாங்கள் அந்தப் பன்றிக் கூட்டத்திற்குள் புகும்படி எங்களை அனுப்பிவிடும்'' என்று வேண்டிக்கொண்டன. 32 அதற்கு அவர், ''போங்கள்'' என்றார். அவை வெளியேறிப் பன்றிகளுக்குள் புகுந்தன. உடனே அப்பன்றிக் கூட்டம் முழுதும் ஓடிச் செங்குத்துப் பாறையின் விளிம்புக்குக் கீழே கடலில் பாய்ந்து தண்ணீரில் மாண்டது. 33 அவற்றை மேய்த்துக்கொண்டிருந்தவர்கள் ஓட்டம்பிடித்தார்கள். அவர்கள் ஊருக்குள் சென்று நடந்தவையனைத்தையும், பேய் பிடித்தவர்களைப்பற்றிய செய்தியையும் விளம்பரப்படுத்தினார்கள். 34 அதைக் கேட்டதும் ஊரார் யாவரும் இயேசுவைப் பார்க்கப் புறப்பட்டு வந்தனர். அவர்கள் அவரைக் கண்டு, தங்கள் நாட்டை விட்டுப் போய்விடும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள்.

### திமிர்வாதமுள்ள ஒருவனைக் குணமாக்குதல்
*(மாற். 2:1–12; லூக். 5:17–26)*

**9** இயேசு படகிலேறிக் கடலைக் கடந்து தமது சொந்த ஊருக்கு வந்தார். 2 அப்பொழுது சிலர் படுக்கையில் கிடந்த திமிர்வாதமுள்ள ஒருவனைப் படுக்கையோடு அவரிடம் கொண்டுவந்தனர். இயேசு அவர்களுக்கிருந்த நம்பிக்கையைக் கண்டு, திமிர்வாதமுள்ளவனிடம், ''மகனே, இனித் தைரியமாயிரு, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிட்டன'' என்று சொன்னார். 3 அதைக் கேட்டதும் வேத அறிஞருள் சிலர், ''இந்த ஆள் தன்னைக் கடவுளுக்குச் சமமாக்கிக் கொண்டு அவரைப் பழிக்கிறானே!'' என்று தங்களுக்குள் சொல்லிக்கொண்டார்கள். 4 அவர்களுடைய சிந்தனைகளை இயேசு அறிந்து, ''உங்கள் உள்ளத்தில் நீங்கள் பொல்லாத காரியங்களைச் சிந்திப்பதேன்? 5 'உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிட்டன' என்று சொல்வதா அல்லது 'எழுந்து நட' என்று சொல்வதா, எது எளிது? 6 என்றாலும், உலகிலே பாவங்களை மன்னிக்க மனுமைந்தருக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறிய வேண்டும்'' என்று சொல்லிவிட்டுத் திமிர்வாதமுள்ளவனைப் பார்த்து, ''நீ எழுந்து உன் படுக்கையை எடுத்துக் கொண்டு உன் வீட்டுக்குப் போ'' என்று சொன்னார். 7 அவனும் எழுந்து தன் வீட்டுக்குப் போனான். 8 அதைக் கண்ட மக்கள் அச்சங் கொண்டார்கள்; இப்படிப்பட்ட அதிகாரத்தை மனிதருக்குக் கொடுத்த கடவுளைப் புகழ்ந்து போற்றினார்கள்.

### மத்தேயு என்பவரைச் சீடராக்குதல்
*(மாற். 2:13–17; லூக். 5:27–32)*

9 இயேசு அவ்விடம் விட்டுச் செல்லுகையில் சுங்கச் சாவடியில் உட்கார்ந்திருந்த ஒருவரைக் கண்டார். அவர் பெயர் மத்தேயு. இயேசு அவரிடம், ''என்னைப் பின்பற்றி வா'' என்று சொன்னார். அவரும் எழுந்து அவரைப் பின்பற்றிச் செல்லலானார்.

10 பிறகு, இயேசு அவருடைய வீட்டில் விருந்துண்ண அமர்ந்திருக்கையில், *ஆயக்காரர், பாவிகள் ஆகியவர்களுள் பலர் அங்கே வந்து இயேசுவோடும் அவருடைய சீடரோடும் விருந்துண்ண அமர்ந்தனர். 11 அதைக் கண்ட பரிசேயர்கள் அவருடைய சீடரிடம், ''உங்கள் போதகர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் சாப்பிடுகிறாரே, இது என்ன?'' என்று கேட்டார்கள். 12 இது அவருடைய காதில் விழவே அவர், ''நோயற்

* மத். 5:6 அடிக்குறிப்பைப் பார்க்க.

**8:26** சங். 107:29. **9:10,11** லூக். 15:1,2

றவர்களுக்கன்று, நோயுள்ளவர்களுக்கே மருத்துவன் தேவை. 13 'பலியை அன்று, இரக்கத்தையே விரும்புகிறேன்' என் பதன் கருத்து இன்னதென்பதை நீங்கள் போய்க் கற்றுத் தெரிந்துகொள்ளுங்கள். நேர்மையானவர்களேயன்று, பாவிகளேயே அழைக்க வந்தேன்'' என்றார்.

### நோன்பிருத்தலைப்பற்றிய கேள்வி

*(மாற். 2:18–22; லூக். 5:33–39)*

14 அப்பொழுது யோவானுடைய சீடர் கள் அவரிடம் வந்து, ''நாங்களும் பரிசேயரும் அடிக்கடி நோன்பிருந்து வரு கிறோமே, உம்முடைய சீடர் ஏன் நோன் பிருப்பதில்லை?'' என்று கேட்டார்கள். 15 அதற்கு இயேசு, ''மணவாளன் தன் தோழரோடு இருக்குமட்டும், அந்தத் தோழர் துக்கங்கொண்டாடுவது எப்படி? மணவாளன் அவர்களை விட்டுப் பிரிக்கப்படும் காலம் வரும், அப்போது அவர்கள் நோன் பிருப்பார்கள். 16 ஒருவனும் பழைய ஆடை யில் கோடித் துணியை ஒட்டுப் போடமாட் டான்; ஒட்டுப் போட்டால், ஒட்டுப் போட்ட துணி ஆடையைக் கிழித்து விடும்; கிழிசலும் பெரிதாகும். 17 அவ் வாறே, பழைய துருத்திகளில் யாரும் புதிய திராட்சை இரசத்தை ஊற்றிவைப் பதில்லை. ஊற்றி வைத்தால், துருத்திகள் கிழியும், இரசம் சிந்திப்போகும். துருத்தி களும் பாழாய்ப்போகும்; புதிய இரசத்தைப் புதிய துருத்திகளிலேதான் ஊற்றி வைப்பார்கள்; அப்பொழுது இரண்டும் பத்திரமாயிருக்கும்'' என்று சொன்னார்.

### பெரும்பாடுள்ள பெண் குணமடைதலும் யவீருவின் மகள் உயிர்த்தெழுதலும்

*(மாற். 5:21–43; லூக். 8:40–56)*

18 இயேசு இவற்றை அவர்களுக்குச் சொல்லிக்கொண்டிருக்கையில், யூதத்தலை வன் ஒருவன் வந்து அவரைப் பணிந்து, அவரிடம், ''என் மகள் இப்போதுதான் இறந்துபோனாள். ஆயினும், நீர் வந்து அவள்மீது உமது கையை வையும்; அவள் உயிர் பெறுவாள்'' என்று சொன்னான். 19 அதன்பேரில் இயேசு எழுந்து தம்முடைய சீடரோடு அவன் பின்னே சென்றார்.

20 அவர் போகையில், பன்னிரு ஆண்டுகளாகப் பெரும்பாட்டினால் வருந்திக் கொண்டிருந்த ஒரு பெண் அவருக்குப் பின்னால் சென்று, 21 ''நான் அவருடைய ஆடையை மட்டும் தொட்டாலே போதும், குணமாகிவிடுவேன்'' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, அவருடைய ஆடையின் ஓரத்தைத் தொட்டாள். 22 இயேசு திரும்பி அவளைப் பார்த்து, ''மகளே, இனித் தைரிய மாயிரு, உன் நம்பிக்கை உன்னைக் குண மாக்கியிருக்கிறது'' என்று சொன்னார். அதே நேரத்தில் அப்பெண் குணமானாள்.

23 இயேசு அந்தத் தலைவன் வீட்டிற்குச் சென்று, அங்கே தாரை ஊதுவோரையும் சந்தடி செய்யும் கூட்டத்தையும் கண்ட போது, 24 ''வெளியே போங்கள்; இச்சிறுமி சாகவில்லை, உறங்குகிறாள்'' என்றார் அவர்களோ அவரைப் பார்த்து நகைத்தார் கள். 25 கூட்டம் வெளியே அனுப்பப்பட்ட பின், அவர் உள்ளே சென்று அவளுடைய கையைப் பிடித்தார்; உடனே அவள் எழுந் திருந்தாள். 26 இச்செய்தி அந்த நாடெங்கும் பரவிற்று.

### குருடர் இருவர் பார்வை பெறுதல்

27 இயேசு அவ்விடம் விட்டுச் செல் கையில், குருடர் இருவர், ''தாவீதின் மைந்தரே, எங்கள்மீது இரங்கியருளும்'' என்று கத்திக்கொண்டே அவருக்குப் பின்னால் சென்றனர். 28 அவர் வீடு வந்து சேர்ந்தபின் அந்தக் குருடர்கள் அவரிடம் வந்தார்கள். இயேசு அவர்களை நோக்கி, ''இந்தக் காரியத்தை என்னால் செய்ய இயலும் என்று நீங்கள் நம்புகிறீர்களா?'' எனக் கேட்டார். 29 அதற்கு அவர்கள், ''ஆம், ஆண்டவரே'' என்றார்கள். அப் பொழுது அவர் அவர்களுடைய கண்களைத் தொட்டு, ''நீங்கள் நம்புகிறபடியே உங் களுக்கு ஆகக்கடவது'' என்றார். 30 அவர் களுடைய கண்கள் பார்வை பெற்றன. இயேசு அவர்களிடம், ''இதை மற்ற யாரும் அறியாதபடி பார்த்துக்கொள்ளுங்கள்'' என்று மிகவும் கண்டிப்பாகச் சொன்னார். 31 ஆனால், அவர்களோ புறப்பட்டுப்போய் நாடெங்கும் அவரைப் பற்றிய செய்தியை விளம்பரப்படுத்தினார்கள்.

### ஓர் ஊமையனைக் குணமாக்குதல்

32 அவர்கள் போனதை அடுத்து, பேய் பிடித்திருந்த ஓர் ஊமையனை அவரிடம் கொண்டுவந்தார்கள். 33 பேயை அவர் ஓட்டினதும் ஊமையன் பேசினான். மக்கள் வியப்படைந்து, ''இஸ்ரவேலரிடையே இப் படி ஒருபோதும் நடந்ததில்லை'' என்றார்கள். 34 ஆனால் பரிசேயரோ, ''பேய்களின் தலை வனைக்கொண்டுதான் இவன் பேய்களை ஓட்டு கிறான்'' என்றார்கள்.

### மக்களின் நிலையைப் பார்த்து இயேசு மனவுருக்கங் கொள்ளுதல்

35 அதன்பின் இயேசு எல்லா ஊர்களுக் கும் பட்டிகளுக்கும் சென்று, அவர்களுடைய தொழுகைக்கூடங்களில் போதித்து, அரு

**9:13** மத். 12:7; ஓசே. 6:6. **9:24** யோ. 11:11. **9:34** மத். 10:25; மாற். 3:22; லூக். 11:15. **9;35** மத். 4:23; மாற். 1:39; லூக். 4:44.

